# முத்தொள்ளாயிரம்

**பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி**
தமிழ்த்துறை, இலயோலா கல்லூரி,
சென்னை –
Prof.donstony@gmail.com
99449 11404

---

- *முத்தொள்ளாயிரம் என்பது சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் மீது பாடப்பட்ட பாடல்கள் அடங்கிய நூல்.*
- *ஒவ்வொரு மன்னரைப் பற்றியும் தொள்ளாயிரம் (900) பாடல்கள் வீதம் இரண்டாயிரத்து எழுநூறு பாடல்கள் (2700) அடங்கிய தொகுப்பு எனக் கருதப்படுகின்றது.*
- *இந்நூல் முழுமையும் கிடைக்கவில்லை.*
- *சேர மன்னன் கோதை*
- *சோழ மன்னன் கிள்ளி*
- *பாண்டிய மன்னன் ஆகிய மூவரைப் பற்றி மூன்று மூன்று பாடல்கள் வீதம் 9 பாடல்கள் மட்டும் உங்களுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன.*

## சேரன் மன்னன் கோதை பற்றிய பாடல்கள்

### பாடல் -1

- சேரமன்னன் கோதை கடல் போன்ற படைசூழ ஊர்வலம் வருகிறான்.
- அயிமைக் கோழியே! அவனைக் கண்ணாரக் காணக் கூடாது என... என் தாய் கதவை அடைத்துத் தாளிட்டிருக்கிறாள்.
- ஆயின் அவனோடு என்னைச் சேர்த்துப் பேசும் ஊரார் வாயை அவளால் அடைக்கமுடியுமா?

### பாடல் -2

- அரசன் கோதையின் யானை
- சினத்தால் சிவந்த கண்களுடன் போரிடும்.
- பகை அரசர்களின் வெண்கொற்றக் குடையைப் பறித்து எறியும்.
- அந்தப் பழக்கத்தால் வானத்தில் வெண்கொற்றக் குடை போல் தோன்றும் நிலாவையும் பறிப்பதற்காகத் தன் கையை நீட்டும்.

### பாடல் -3

காயும் சினம் கொண்ட கோதையின் யானை

- பகைமன்னர்களின் வேல்-கதவைத் தகர்த்து எறிந்தபின்
- கோட்டைக் கதவைப் பெயர்த்து எடுத்துத் தன் கொம்புகளில் தூக்கிக்கொண்டு நிற்பது
- கடலில் ஒய்ந்து நிற்கும் நாவாய்க்கப்பல் போல் தோன்றுகிறது.

## சோழன் மன்னன் கிள்ளி பற்றிய பாடல்கள்

### பாடல் -1

- கிள்ளி உலா வருகிறான்.
- அவனைக் காணவேண்டும் என்று என் கண் கவலை கொண்டுள்ளது.
- ஆனால், அதற்கு உடன்படாத நாணம் என்னைப் பின்வாங்கச் செய்கிறது.
- இதனால் என் நெஞ்சு இருதலைக் கொள்ளி எறும்பு போல முன்னும் பின்னும் நகர்ந்து ஊசலாடுகிறது.

### பாடல் – 2

- கிள்ளி காலையில் பூமாலை சூடிக்கொண்டு உலா வருகிறான்.
- காலையிலேயே வானவில் போட்டுக்கொண்டிருக்கும் வானம் போல் அவன் தோன்றுகிறான்.
- பொழுது சாய்ந்தவுடன் அவன் கழற்றி எறிந்த மாலையை விலைக்கு விற்கின்றனர்.
- அவன் கழுத்தில் அணிந்த மாலையை அதிகம் பேர் விரும்பினார்கள் என்பதற்காக விற்கின்றனர்.
- மாலையில் விற்கும் வெற்று மாலையால் என்ன பயன்? – அவள் கேட்கிறாள்.



### பாடல் – 3

- கல்மலை போன்ற தோள் கொண்டவன் கிள்ளி.
- அவனது ஊர்தி ஆண்யானை.
- அது அவனது பகைவரின் கோட்டை மதில்களைப் பாய்ந்து இடித்தது.
- அதனால் அதன் தந்தங்களின் நுனி முறிந்து போயிற்று.
- போரில் விழுந்த மன்னர்களின் தலைமுடியை (கிரீடத்தை) இடறி அதன் கால்நகங்கள் தேய்ந்து போயின.

- இவற்றைத் தன் பெண்யானைக்குக் காட்டுவதற்கு நாணிக் கட்டுத்தறியின் புறக்கடையிலேயை அந்த ஆண்யானை தயங்கிக்கொண்டு நின்றது.

## பாண்டியன் மன்னன் கடுங்கோன் பற்றிய பாடல்கள்

### பாடல் - 1

- கடுங்கோன் உலா வந்தான்.
- அவனை நான் காணக்கூடாது என்று, "உன்னைக் காப்பாற்றிக்கொண்டு அடங்கு" என்று சொல்லி என் தாய் என்னை இல்லத்தில் அடைத்து வைத்தாள்.
- உள்ளேயும் ஓடியாட முடியாமல் கட்டியும் போட்டாள்.
- ஆனால் கதவிலே முன்பே துளை ஒன்று போட்டுவைத்திருந்தார்கள்.
- (அது வெளியே இருப்பவர் யார் என்று பார்க்க உதவும் கதவுக்கண்.)
- அது அவன் நல்லழகையெல்லாம் காணும் வகையில் அமைந்திருந்தது.
- இப்படிக் கதவுக்கண் ஓட்டை போட்டு வைத்திருக்கிறார்களே, அவர்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன். – அவள் கூறுகிறாள். |

### பாடல் - 2

- பாண்டிய மன்னன் அற உணர்வினன்;
- போரில் பகைவரும் பாண்டியனை நெருங்குவதற்கு அஞ்சுவர்.
- பகைவரை அமிக்குக் கன் மக்களுக்கு நன்மையைச் செய்யும் வேல்படையைக் கொண்டவன்;
- போரிட்ட பகைமன்னர்களின் மகிலை வென்றாலும் பகைமன்னரின் மகளிர் கூட்டத்தைத் தொட மாட்டான்.
- அப்படிப் பட்ட பாண்டிய மன்னனின் நாட்டு மலைச்சாரலின் அருவியில் ஆண் யானை மேல், அதன் பெண் யானை அன்புடன் நீர் தெளித்து மகிழும்

### பாடல் - 3

- **நாட்டில்** – வளம் பொருந்திய ஊரில் இயல், இசை, நாடகம் ஆகிய நூல்களும் வளர்கின்றன.
- **வயலில் –** வலிமை உடையவனாகிய பாண்டியன் மாறனின் நிலத்தில் செம்மை நிறமான பொன் விளைகிறது.

- **கடலில் –** வெண்மை நிறமுடைய சங்குகளும், முத்துகளும் கிடைக்கின்றன.
- ***மலையில்*** – ஓங்கிய மலைச்சாரலில் யானைகள் பெருகுகின்றன.
- **போரில் –** மாறனின் கூர்மையான வேல்.மாலை அணிந்த பகைநாட்டு மன்னர்களின் பரந்த மார்பில் குத்தி பகை முடிகிறது